சமதர்ம மலர் 1.

# பெண்ணுரிமைக் கீதங்கள்

---

"மாதர்தம்மை இழிவுசெய்யும் மடமையைக் கொளுத்துவோம்
வையவாழ்வுதன்னி லெந்தவகையிலும் நமக்குளே
தாதரென்ற நிலைமைமாறி ஆண்களோடு பெண்களும்
சரிநிகர் சமானமாக வாழ்வமிந்த நாட்டிலே"

—பாரதி.

ஜீவா

# பெண்ணுரிமைக் கீதங்கள்

---

> "மாதர்தம்மை இழிவுசெய்யும் மடமையைக் கொளுத்துவோம்
> வையவாழ்வுதன்னி லெந்தவகையிலும் நமக்குளே
> தாதரென்ற நிலைமைமாறி ஆண்களோடு பெண்களும்
> சரிநிகர் சமானமாக வாழ்வமிந்த நாட்டிலே"
>
> —பாரதி.

விலை 1 அணா.



ப. ஜீவானந்

# முன்னுரை.

"சும்மாவிருப்பதே சுகம்" என்ற திருக்கூட்டத்தைத் திரும்பிக்கூட பாராதவன் நான். 1932-ல் காங்கிரஸ் சட்ட மறுப்பில் ஈடுபட்டு, ஓராண்டுச் சிறைவாசம் பெற்றேன். கடலூர், திருச்சி சிறைச்சாலைகளில் எனது பொழுதைச் சும்மா கழிக்க முடியவில்லை. படிப்பும், எழுத்தும் பொழுதைப் போக்கின. என் மனதை உறுத்திக்கொண்டிருந்த விஷயங்களில் ஒன்று பெண்ணடிமை. பெண்ணடிமை தேய்ந்து, பெண்ணுரிமை தழைக்கவேண்டுமென்னும் ஆர்வத்தோடு சில பாட்டுகள் அக்காலங்களில் இயற்றினேன். அவற்றை தமிழுலகத்தின் முன் விநயமாக சமர்ப்பிக்கிறேன். அவசியமாயின் ஆதரிக்கட்டும்.

ப. ஜீ.

# 1. சுதந்திரோதயம்.

(ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் என்ற மெட்டு.)

சூரியன் தோன்றிவிட்டான்-சோதரீ!
தூக்கம் விட்டேயெழுவாய்
நாரியர் விடுதலை-முழங்கும்
நாதம் செவியுறுவாய்
பேரிகையின் ஒலியே-சுதந்திரம்
பேசி யொலிக்கின்றதே
சீரியதோர் கிளர்ச்சி-தேசத்தில்
ஜேஜென்று ஓங்குதுபார் (சூரியன்)

பெண்ணுரிமைகளெல்லாம்-சோதரீ!
பேணவேண்டுமென்றே
எண்ணும் வீராங்கனைகள்-மகாநாடு
எங்குமே கூட்டுகிறார்
நண்ணும் பிறப்புரிமை-நிலைத்திட
நாடி முயலுகின்றார்
உண்ணும் உணவிலுமே-விடுதலை
உயிர்க்குத் தேவையன்றோ (சூரியன்)

தேசியச் சேவைதனில்-சோதரீ!
தேவியர் வெற்றிகொண்டார்
ராஜியப் போர்முனையில்-பெண்மணிகள்
நன்னிலைமை யடைந்தார்
தாசியர் பொட்டறுத்தார்-இன்றுமிகத்
தையலர் தம்மிடையே
மாசிலாப் பேருணர்ச்சி-தோன்றிப்பல
மாற்றங்கள் நேர்வதைப்பார் (சூரியன்)

கன்னி விதவையர்கள்-தாமுருக்கும்
கண்ணீர் துடைந்திடவே
உன்னி மறு மணங்கள்-ஜயத்துடன்
ஓங்கிப் பெருகுதுகாண்
மன்னிய காதலினால்-கைம்பெண்களை
மணந்து கொள்வதும்
அந்நிய ஜாதியெனும்-தடைகளும்
அகன்றொழிவதுபார் (சூரியன்)

திட்டமுடன்பயின்று-கல்லூரியில்
தேர்ந்து விளங்குகிறார்

சட்ட சபைகளிலும்-காரிகையர்
ஸ்தானம் பெற்றுநிற்கிறார்
இட்டமாய் மேனாட்டில்-கல்வி கற்று
ஏகி உயர்வதுவும்
வட்ட மேஜைதனிலும்-இடம்பெற்ற
வனப்பும் காண்கிலேயோ (சூரியன்)

தூங்குதல் சரியல்ல-இவ்வேளையில்
சுறு சுறுப்புடனே
ஏங்காதுழைப்பதுவே-சோதரிகின்
ஏற்ற கடமையுணர்
பாங்குடன் ஜீவானந்தன்-புகழ்ந்திடும்
பல துறைகளிலும்
ஈங்கு சுதந்திரத்தை-பெண்மணிகள்
எய்த வழிதேடு (சூரியன்)

---

## 2. பெண் அடிமை பழித்தல்.

(என்ன உறக்கமடா என்ற மெட்டு)

பல்லவி.

பெண்ணடிமை பழிப்போம் இன்றே
பெண்ணடிமை யொழிப்போம் (பெண்)

அநுபல்லவி.

மண்ணிலுறுநல்ல வாழ்க்கையவர்க்கில்லை
கண்ணியமோர் தலை காட்டுவது தொல்லை (பெண்)

சரணங்கள்.

உண்ணும் வகையினிலும் சொத்து
உரிமை வகையினிலும்
எண்ணும் வகையினிலும் வேண்டும்
இன்ப வகையினிலும்
கண்ணனையகல்வி கற்கும் வகைதனில்
நண்ணும்பலதொழில் பண்ணும் வகைதனில் (பெண்)

மேற்றிசை நாட்டிலுள்ளார் இன்று
மேன்மையுற்றோங்குகின்றார்
போற்றியே பெண்ணுரிமை வாழ்வில்
புத்தமுதுண்ணுகின்றார்

நாற்றிசையும்புகழ் ஆற்றல்வளர்க்கின்றார்
சாற்றிடு மணச் சமதர்மங்காண்கின்றார் (பெண்)

பந்தமகற்றுகின்றார் பெண்கள்
பட்டம் பெறத்துணிந்தார்
எந்தத் துறையிலுமே பெண்கள்
ஏற்றம்பெறமுனைந்தார்
சந்ததமும்ஜீவா னந்தன்புகழ்ந்திட
முந்திய அடிமை நைந்து தொலைந்திட (பெண்)

---

## 3. ஆடவர் ஆதிக்க நிந்தனை.

(ஐயா பழநிமலைவேலா என்ற மெட்டு.)

ஐயோ இதென்ன கொடுங்காலம் இந்த
ஆடவர் கொண்டிருக்குங்கோலம்
மெய்யா யிவர்களசெய்யுஞ்சாலம் பெண்கள்
மீளாதொடுக்கும் ஆலகாலம் (ஐயோ)

பொட்டறுக்க வழிவிடமாட்டார் நாட்டில்
பொம்மைக்கலியாணஞ் செய்துபோட்டார்
கெட்டிடவீர் என்று மீறிக்கேட்டால் மதக்
கிறுக்கில் புராணங்கூறிபபோட்டார் (ஐயோ)

தக்கது கற்பென்றுரிமை தடுத்தார் விப
சாரிகளாயச்செய்துமெமைக்கெடுத்தார்
மிக்கநல்லோர் போலொழுக்கம்படித்தார் எம்மை
மேதினியிற்காத்திட நடித்தார் (ஐயோ)

மாயையென்றும் பேய்களென்றும் வைதார் எமமேல்
வலிமையில்லாது வசைபெய்தார்
தாயைவெறுக்கும் கொடுமைசெய்தார் இன்று
தயங்கி அடிமைவாழ்வு நெய்தார் (ஐயோ)

செல்வநிலை தொழிலுயர்போதம் பெறச்
செய்வதில்வகுத்தார பலபேதம
பல்விதததும ஜீவானந்தன்கீதம் என்றும்
பழித்திடச் செய்தாரேயநீதம (ஐயோ)

## 4. காதல் மணம் பேணல்.

(கும்மி)

காதல்மணம்பேண வேண்டுமடி-பொய்மைக்
கட்டுடைத்தோங்கிட வேண்டுமடி
சாதலைவேண்டி நாம் வாழவில்லை-இங்கு
சங்கடம்வேண்டியும் வாழவில்லை 1.

பூவினிலின்பம் பொதுவுடைமை-யெனப்
போற்றிடுவோம் பறைசாற்றிடுவோம்
மேவியதுபெறுஞ் ஜீவிதமே-கொண்டு
மெத்தவும் நற்பணியாற்றிடுவோம் 2.

பெண்களொழுக்கம் பிரியமாய்ப்பேசிப்-பின்
பேணுவதுபோலவே நடிப்பார்
தங்களொழுக்கந் தனைமறப்பார்-சொல்லும்
சாத்திரந்தூற்றிட வேண்டுமடி 3.

தந்தைதாய்சுற்றத்தார் தங்கள்-விருப்பத்தில்
தான்கலியாணங்கள் ஈங்கியற்ற
வந்தவிதியெனப் பெண்களுடன்-படும்
வாடிக்கையோட்டிட வேண்டுமடி 4.

காசுக்கொருமணம் பீசுக்கொரு-மணம்
காட்டும்வெளிவேஷத்தின்மணமும்
நேசமில்லாக்குலம் சாதிக்கொரு-மணம்
நித்தம்நிகழ்வதை நாமொழிப்போம் 5.

ஆணுக்குள்ளநீதி பெண்ணுக்குமுண்-டென்று
ஆக்கம்பெறும்வழி நோக்கிடுவோம்
காணும்விதவைகள் கஷ்டங்கள்-தீர்ந்திடக்
கைம்பெண்கலப்பு மணம்புரிவோம் 6.

கற்பெனமாதரை நிர்ப்பந்தஞ்-செய்வதைக்
கட்டோடு குப்பையில் விட்டெறிவோம்
தப்புத்தவறுகள் செய்வதில்-ஆண்களே
தையலரைவெல்வோ ரென்றறிவோம் 7.

ஒத்தஉரிமையும் ஒத்த-முறைகளும்
உண்டெனில் நன்றென ஒப்பிடுவோம்
சித்தப்படியாண்கள் செய்கின்றசெய்கை-கிஞ்
சிற்றும்பொருளுண்மை செப்பிடுவோம் 8.

சாதிமதம்நிறம் தேசம்குலம்செல்வம்
தம்மைப்புகுத்திக் காதல்தடுத்தார்
நீதிதெரிந்து நெறிதெளிந்தின்றுநாம்
நேசித்துக்காதலைப் பூசைசெய்வோம் 9.

நாவாரக்காத லினைப்புகழ்வோம்-எந்த
நாளுமின்ப வாழ்விலே திகழ்வோம்
ஜீவானந்தன் கீதம் பாடிடுவோம்-மணச்
சீர் திருத்தங்கள் கொண்டாடிடுவோம் (காதல்) 10.

---

## 5. இளமை மணக்கேடு.

(காமி சத்யபாமா கதவைத்திறவாய் என்ற மெட்டு.)

பொம்மைக் கலியாணம் பொருந்தா மணமே
பொருந்தா மணமே
மணமே
மணமே-அந்தோ (பொ)

தன்மையறியாப்பெண்ணை ஸதியெனச்செய்துபின்னை
தின்மையடைய வைக்கிறார்
வைக்கிறார் வைக்கிறார்
வைக்கிறார்-அந்தோ (பொ)

கன்னிவிதவைச்சாலே காண்பதித்தியவேலை
என்னத்தெரியா மூடரே
மூடரே மூடரே மூடரே-அந்தோ (பொ)

பாழும்வைதிகராலே பாவையரையிக்காலே
சூழுங்கொடுமையிதுவே
யிதுவே யிதுவே
யிதுவே-அந்தோ (பொ)

தக்க சாரதாச்சட்டம் தளரவைத்திட்டதிட்டம்
மிக்ககலியை வீட்டுவோம்
வீட்டுவோம் வீட்டுவோம்
வீட்டுவோம்-அந்தோ (பொ)

ஜீவானந்தன் சொற்கீதம் செப்புந்தீவிரவாதம்
மேவாத வீணர் சடங்காம்
சடங்காம் சடங்காம்
சடங்காம்-அந்தோ (பொ)

## 6. வேண்டுகோள்.

(கரும்புத்தோட்டத்திலே என்ற மெட்டு.)

செந்தமிழ்ச் செல்வியரே—மாதர்
சீர்திருத்தம்பெற ஆர்வமோடுழைப்பீர்
மந்தகாசமுடனே—புவி
மக்கள் சமத்துவமுற்று நலம்பெறும்
சுந்தரஞ்சேர்பதமே—வாழ்வில்
தோகையருற்றிடத் தூண்டுவதோடதைச்
சிந்தனைசெய்திடுவீர்—வெற்றி
சேர்க்கத்துணிந்து நன்னோக்குடன் முயல்வீர் [செந்]

வித்தை விரும்புதற்கும்—உயர்
விஞ்ஞானந் தேர்ந்திழி அஞ்ஞானம்போக்கற்கும்
சொத்துரிமையதற்கும்—தொழில்
தோறும் பயன்பெறு மாறுபயில்தற்கும்
இத்தரைமீதினிலே—ஆண்கள்
எய்தும்வசதி பெண்பாலரெல்லோர்களும்
நத்தும்படியுழைப்பீர்—எந்த
நாளுஞ்சுதந்திரஞ் சூழும்படிசெய்வீர் [செந்]

பெண்ணுயிருக்கையிலே—தன்னைப்
பெற்றோர்க்கடிமை பின் நற்றாரமாகிய
பெண்ணுயிருக்கையிலே—மணம்
பேணிசமெய்ப் புருஷர்க் கானவடிமைதாய்ப்
பெண்ணுயிருக்கையிலே—பெற்ற
பிள்ளைக டிமையென் றுள்ள நாளெல்லாமும்
புண்ணானவாழ்க்கையிலே—உறும்
புல்லடி மையறக் கல்வியெறிகுவீர் [செந்]

கற்பெனக்காட்டிவைத்தார்—ஆண்கள்
கற்றவித் தையெல்லாங் காட்டிநன்மாதரை
வற்புறுத்திக்கெடுத்தார்—செக்கு
மாடுகளைப்போல வாட்டிவதைத்தனர்
அற்பரென நினைத்தார்—பெண்ணை
ஆசைக்கிறுக்காலே வேசையராக்கினர்
துற்புத்தியாடவரே—யிந்தத்
துஷ்டத்தனங்களை வெட்டிவிழுத்துவீர் [செந்]

பிள்ளை பெறுவதற்கு—வேண்டிப்
பேணுமோர்யந்திரம் ஆணுக்குப்பெண்ணிங்கு;
உள்ளபடியுரைத்தால்—பெண்ணை

உற்றசிற்றின்பக்கருவியாய்ப்பாவித்தார்
கள்ளைக்குடித்தவர்போல்—வேலைக்
காரியென்றெண்ணி நெஞ்சாரவுதைக்கிறார்
எள்ளி நகைத்திடுவீர்—இந்த
ஈனநிலைமையைத்தானகற்றிடுவீர் [செந்]

ஆதிக்கப்பித்துடைப்பீர்—இங்கு
ஆடவர்தந்திடுங்கேடுகளும் வாழ்வைப்
பேதிக்கச்செய்குறும்பும்—வேண்டாப்
பீடைகளுமறத்தோழர்காளுழைப்பீர்
சோதிக்கச் சோதிக்கவும்—எழில்
சுத்த சமதர்மமுற்றிடவைதீகம்
சேதிக்கத்தானெழுவீர்—ஜே
ஜீவானந்தன் கீதம் நாவாரப்பாடுவீர் [செந்]

---

## 7. விடுதலைப்போர்.

(கண்ணன் மனநிலையைத் தங்கமேதங்கம் என்ற மெட்டு.)

மண்ணில் விடுதலையே தங்கமே தங்கம்-வேண்டி
மனமாரப்போர் புரிவோம் தங்கமே தங்கம்
எண்ணம் வலுத்து விட்டால் தங்கமே தங்கம்-இங்கு
எவ்வினையும் வெற்றியுறும் தங்கமே தங்கம் (1)

மாதர்களிலாடவர்க்கே தங்கமே தங்கம்-மேன்மை
வந்ததென்ன கூறிடுவாய் தங்கமே தங்கம்
பேதையரென்றே பழித்தார் தங்கமே தங்கம்-இந்தப்
பிழை பொறுத்திடோமடி தங்கமே தங்கம் (2)

தாயினுமுயர்ந்த பதம் தங்கமே தங்கம்-இந்தத்
தாரணியிலுண்டுமோடி தங்கமே தங்கம்
காயும் பேயுமெனப் பெண்ணை தங்கமே தங்கம்-வைதல்
ஞாயமோவுரைத்திடுவாய் தங்கமே தங்கம் (3)

வாழ்க்கையெனு மொப்பந்தத்தில் தங்கமே தங்கம்-நிகர்
மாதராண்களுக்கறிவாய் தங்கமே தங்கம்
தாழ்க்கையிலே பெண்ணையிங்கு தங்கமே தங்கம்-வாழ்வு
தாழ்மையுறக் கண்டோமடி தங்கமே தங்கம் (4)

செக்கு மாடு போலுழைத்து வீட்டிலடங்கி-வாழ்ச்
செய்து ஜம்பம் பேசுகின்றார் தங்கமே தங்கம்

தக்க கல்வியோடுரிமை மாதரடைந்து-வாழில்
தாரணியுந் தாங்கிடாதோ தங்கமே தங்கம் (5)

எத்தனை காலந்தானிந்தச் சர்வாதிகாரம்-கொள்ள
எண்ணினரோ ஆடவர்கள் தங்கமே தங்கம்
சத்திய மிதற்கழிவு தான் தொடங்கிற்று-இனிச்
சம தர்மமோங்குமடி தங்கமே தங்கம் (6)

இயற்கை யுணர்ச்சி யிருபாலர் தமக்கும்-ஒன்றே
என்பதை மறுப் பாருண்டோ தங்கமே தங்கம்
செயற்கைச் செங்கோலாடவர் கையடைந்ததால்-நேர்ந்த
தீங்கினுக்கோ ரெல்லையுண்டோ தங்கமே தங்கம் (7)

விருப்பு வெறுப்புக்கதிகாரிக ளென்றே-ஆண்கள்
விதித்த வழக்கங்களை மிதித்திடுவோம்
ஒருப்பட மாட்டோமெந்த ஒரு தலைக்கும்-சம
உரிமை பெற முயல்வோம் தங்கமே தங்கம் (8)

காலம் நெருங்குதடி தங்கமே தங்கம்-வெற்றிக்
கான மொலிக்குதடி தங்கமே தங்கம்
சீலம் சிறக்குதடி தங்கமே தங்கம்-மாதர்
ஜெயம் பெறுவார்கள் திண்ணம் தங்கமே தங்கம் (9)

ஜீவானந்தன் பாவின் வண்ணம் தங்கமே தங்கம்-சீர்
திருந்திடக் காண்போமடி தங்கமே தங்கம்
நாவார மாதர் விடுதலை முழக்கி-நலம்
நாளும்பெறவுழைப்போம் தங்கமே தங்கம் (10)

---

## 8. பெண்ணுரிமைப் போருக்கு அழைப்பு.

(பத்தொன்பதாம் நூற்றுக்கு மேல் பதினாலாம் வருடத்திலே
என்ற மெட்டு)

இன்பவல்லியருறும் இழிவடிமை தீர்ந்திடவே
என்றுஞ்சுகந்தருநல் வின்னுரிமை சேர்ந்திடவே
எல்லோருங் கூடித்தொண் டாற்றிடுவீர்
ஏந்திழையர் விடுதலையைப் போற்றிடுவீர் (1)

துன்பந்துடைக்கும்வழி சுத்தசம தர்மமொன்றே
சொத்துரிமை தொழிலுரிமை தோகையர்க்கும் நல்கியின்றே
சொகுசாக வாழுவீரெந் நாளுமேதான்
வெகுவாகத் தோழமையுஞ் சூழுமேதான் (2)

ஞாலமுழுதும் பெண்கள் நாகரீகத் தோங்குகின்றார்
நன்மையடைந்திடகம் நாட்டுமாதரீங்கு நின்றார்
நல்லகாலம் விரைவில் நாடுதையா
தொல்லடிமையொழியத் தேடுமெய்யாய் (3)

காலமுழுதுங்கைம்பெண் கஷ்டத்தாற்கண்ணீர் வடித்தார்
கலப்புமணம்புரிந்தும் கவலைதீர்க்கவே முடித்தார்
கண்ணியமிக்கைம்பெண் மண வைபவமே
காளையர்களின்கடமை யித்தவமே (4)

மாசிலாப்பெண்களின்றி வாழ்க்கையிலுஞ்சோபிதமோ
மாதாவயிறெரிய மக்கள் நலஸ்தாபிதமோ
மாந்தரேசொல்லிடுவீர் நீதியுண்டோ
மாதரைக்கௌரவித்தல் மேன்மையன்றோ (5)

தேசியயுத்தத்திலே தீவிரமாய்ப் போர்புரிவோர்
தேவியரென்னுமுண்மை திட்டமுடனே தெரிவோர்
ஜீவானந்தன் புகலும் பாவினமே
செப்பும்படி நடப்பீரித்தினமே (இன்)

---

## 9. வெளிவேஷம்.

மாங்காய்ப்பாலுண்டு மலைமேலிருப்போர்க்கு என்ற மெட்டு.

காதலைத்தான் வாழ்த்தி கருத்தொருமித்தாரேல்
ஜாதகமேதுக்கடி—குதம்பாய்
ஜாதகமேதுக்கடி

திருத்தமாய் ஸதிபதி தேர்தல் கைக்கொள்வாரேல்
பொருத்தங்களேதுக்கடி—குதம்பாய்
பொருத்தங்களேதுக்கடி

மாசிலாதாண்பெண்கள் மணவினை கொள்வாரேல்
ஜோசியமேதுக்கடி—குதம்பாய்
ஜோசியமேதுக்கடி

சேம்பெறுமார்க்கம் திட்டமாய்க் கொள்வாரேல்
ஹோமங்களேதுக்கடி—குதம்பாய்
ஹோமங்களேதுக்கடி

திடங்கொண்டாண்பெண் தம்மில் தேர்ந்து மணப்பாரேல்
சடங்குகளேதுக்கடி—குதம்பாய்
சடங்குகளேதுக்கடி

கற்றுராய்ந்தேற்றுப்பின் கலியாணஞ்செய்வதில்
பெற்றோர்களேதுக்கடி—குதம்பாய்
பெற்றோர்களேதுக்கடி

போலியரன்றிமனப் பூர்வமாய் வாழ்வாரேல்
தாலியுமேதுக்கடி—குதம்பாய்
தாலியுமேதுக்கடி

பொற்புறுங்காதலால் புவிதனில் வாழ்வாரேல்
கற்பென்பதேதுக்கடி—குதம்பாய்
கற்பென்பதேதுக்கடி

உபசாரமாமண உரிமை பெறுவாரேல்
விபசாரமேதுக்கடி—குதம்பாய்
விபசாரமேதுக்கடி

தெளிவாய் ஜீவானந்தன் செப்பும்படி நடந்தால்
வெளிவேஷமேதுக்கடி—குதம்பாய்
வெளிவேஷமேதுக்கடி (காதலே)

---

## 10. ஓர் யோசனே.

(அடைக்கலமே அடைக்கலமே என்றமெட்டு.)

**பல்லவி.**

சோதரிகாள் சோதரிகாள்
தொடுத்துவிடுதலேப்போர் முடித்துப்பயன்பெறுவீர் (சோ)

(அநுபல்லவி.)

ஆதரமாமுரிமை ஆனந்தஞ்சூழ
அடிமையொழித்தாடவர் ஆதிக்கம்வீழ (சோதரி)

சரணங்கள்.

மகிதலமுழுதிலும் மாதர்முன்னேற்றம்
மனிதவர்க்கந்தழைக்கும் வழியிதுதேற்றம்
சுகிர்தசுகுமாரிகள் சுதந்திரத்தோற்றம்
சொல்லருமிதந்தரும் நல்லியன்மாற்றம் (சோதரி)

ஜருக்கிமாதர்கள்கோஷாத் துணிகளைநீத்தார்
தொழின்முறைகல்வியால் சுகம்பல சேர்த்தார்
செருக்கிலாடவருடன் சேர்ந்தறங்காத்தார்
சேமமளித்திடுஞ்சீர் திருத்தங்கள்கோத்தார் (சோதரி)

உருசியநாட்டுப்பெண்கள் உயர்ந்திடுஞ்சீரும்
ஓங்கும்ஜப்பான்மங்கையர் உறும்பலபேறும்
கருதரியவிதமாய்க் களிக்கின்றநேரும்
கண்டுஜீவானந்தன்சொற் கொண்டுமுயன்றுபாரும் (சோ)

---

## 11. நவநாரி.

(தசரதராஜகுமாரா என்ற மெட்டு)

பல்லவி.

சுகிர்தசல்லாபகுமாரி-சுகவாரி-ஒய்யாரி-நவநாரி (சுகிர்)

சரணங்கள்.

மகிதலத்தேயின்று மாதர்சுதந்த்ரம்
மதிப்புறும்படியுரைத் ததுதிருமந்த்ரம்
முகிலெனப் பயன்றர மொழிந்த நின்தந்த்ரம்
முதன்மையதாமுரசோச்சு, உண்மையாச்சு,
வாழ்வின்மூச்சு, நின்பேச்சு (சுகிர்த)

ஞானவொளிதவழ் நங்கைநல்லாளே
நளிர்மொழி விடுதலை ஞாயவல்லாளே
ஈனமடிமையோட்டும் மான்விழியாளே
என்னுயிர்க்கினிய கல்யாணி அறம்பேணி,
உயர்வாணி, அதிராணி (சுகிர்த)

சர்வசமத்துவமும் சாற்றும் பெண்ணரசி
தையலருரிமைகள் தாங்கெழில் ஸரஸி
கர்வமலியாடவர் கருத்தழி ஸுருசி
காதலைப்போற்றுமுல்லாசி, என்றுங்காசில்,
மணம்பேசி, ஒளிர்நேசி (சுகிர்த)

சந்ததமும்ஜீவா னந்தன்சொற்பாடும்
சமரஸசமதர்மம் சரிநிகர்நாடும்
சுந்தரக்கொள்கைசேர் தோகைநின்பீடும்
தொண்டுமேருமை சந்த்ரவதனி, பிறைநுதலி,
சுகமதனி, அருஞ்சுதனி (சுகிர்த)

## 12. கடமையுணர்த்தல்.

(பச்சைக்குழந்தையடி என்றமெட்டு)

பொற்கொடியான பெண்ணே—எந்தன்
புண்ணியமே கண்மணியே
சற்குணமே கேளாயடி—ஒரு
சங்கதி நான் சொல்லுகிறேன்
கற்கண்டினுமினிது—அருங்
காட்சி சுதந்திரமே
சொற்கொண்டு வாழ்ந்திடுவாய்—என்றும்
சுயமதிப்பைப்போற்றிடுவாய் (1)

சோம்பல்கெடுதியடி—தேசத்
தொண்டிலோங்கவேண்டுமடி
ஆம்பல் திருத்தங்களும்—இங்கு
ஆக்கிநலங்காண்பாயடி
தேம்பியழுவதிலே—ஒன்றும்
சித்தியாவதில்லையடி
சாம்பி நிற்கவேண்டாமடி—கடுஞ்
சண்டையிட்டு வெல்வாயடி (2)

சாதிபேதம் விலக்கு—கெட்ட
சமயபேதமும் விலக்கு
போதிய கல்விபெறு—மாதர்
பொற்பதத்தையேவிளக்கு
நீதி நிலைத்திடவே—இந்த
நீணிலத்திலென்றுமேதான்
சேதிபலவேயுரைக்கும்—புவி
ஜீவானந்தன் கீதமடி (3)

---

## 13. மாதர் விடுதலை

(பச்சைமலை பவழமலை என்ற மெட்டு)

மாதர்விடுதலை பெறும் மார்க்கத்தினைச்சொல்வோம்
மாநிலத்திலே சமத்வ வாழ்க்கைதனைவெல்வோம்
சோதரத்துவத்தின் நலம்தோன்றவுழைப்போமே
சுத்தசம தர்மமுறுந் தொண்டுசெய்குவோமே

பாதகமாம்போலியர்செய் பாவனைகள்போச்சு
பாழுமத வேஷமெலாம் பஞ்சாய்ப்பறந்தாச்சு
ஓதரும்சுதந்திரமே ஓங்குகின்றதின்று
உண்மைவிளக் கம்பெறவே ஊக்கங்கொள்வோம் நன்று (1)

மூத்தபொய்மைபேணுகின்ற மூடரெனவாழோம்
முன்னேற்றத்தை யேபழிக்கும் மோசமதில்வீழோம்
வார்த்தையிலும்வாழ்க்கையிலும் வன்மைபெறுமாறு
வஞ்சனைத விர்ப்போமன்பில் வாழ்வோம்பெரும்பேறு
கோத்தபுலைச்சட்டங்களைக் கூசாதுமறுப்போம்
கூறுமடிமைத்தனத்தின் கொள்கையைவெறுப்போம்
சேர்த்தமதிகொண்டுலகில் செம்மையுறக்கற்போம்
ஜீவானந்தமேவிடுநற் செய்கைதனில் நிற்போம். (2)

---

## 14. (கிளிக்கண்ணி)

மாதர்விடுதலையின் மாட்சிபெறுவதற்குச்
சாதகமாமுறையே—கிளியே
தாங்கியுழைப்பாயடீ

கண்களிருபாலாரும் காட்சிஉலகவாழ்வு
பெண்கள்சரிநிகராய்க்—கிளியே
பேணிடவாழ்வாயடீ

வாழ்வில்பொறுப்படைவார் வாய்ந்த உரிமைகொள்வார்
தாழ்வினில் வாழமாட்டார்—கிளியே
தையலரென்றுமினி

காதலை வாழ்த்திடுவார் கவலையைவீழ்த்திடுவார்
சோதரிகளுலகில்—கிளியே
சுகமுறவாழ்வாரடீ

பெண்ணினந்தாழ்ந்ததென்று பேசிப்பிதற்றிநின்று
எண்ணினமாக்களெல்லாம்—கிளியே
இகழ்ந்திடப்பெற்றாரடீ

மங்கையரடிமையாய் வாழ்கின்றநாடடிமைப்
பங்கமடையுமடீ—கிளியே
பாழிலுழலுமடீ

கன்னியர்விதவையாய்க் கதறும் கொடுமையைப்போல்
இந்நிலத்தேதுமுண்டோ—கிளியே
இன்னலுக்கெல்லையுண்டோ

சொத்துஞ்சுகமுமற்று துயருறுகின்றபாழும்
கொத்தடிமையொழிய—கிளியே
கூடியுழைப்பாயடீ

பொங்கும்சுதந்திரத்தைப் பூதலமாதர்கொண்டார்
இங்கும் பெறுவதற்கே—கிளியே
ஏற்றதொண்டாற்றிடுவாய்

ஜீவானந்தம்பருக சேமமுற்றும்பெருக
நாவாரப்பாடிடுவாய்—கிளியே
நாளும்விடுதலையே

---

15. (அண்ணி தயைபண்ணி என்றமெட்டு)

தங்காய் எழில் நங்காய்—பணி
சார்வாய் புகழ் தேர்வாய்
தாசிவேசித் தன்மை பெண்க
ளாசிப்பதற வொழிப்பாய் (தங்காய்)

சாதிமதபேதம்—பெருஞ்
சாலம் கேட நீதம்
சாத்திரப் புரட்டறுக்கும்
கீர்த்திவிடு தலைகாண்பாய் (தங்காய்)

ஊக்கம் இட நோக்கம்—என்றும்
ஓங்கு விக்கு மாக்கம்
உண்மை வெல்லு மென்றுநம்பித்
திண்மையோ டுழைத்திடம்மா (தங்காய்)

இன்று வழி யொன்று—முன்
னேற்றம் பெறல் நன்று
ஏந்திழைய ராடவரைச்
சார்ந்துநிற்ப தழகல்ல (தங்காய்)

பெண்ணே வாழ்வின் கண்ணே—உண்மை
பேணி நல முண்ணே
பேதையரெ னப்பழித்தல்
தீதெனப்பு கல்வாயடி (தங்காய்)

தன்கை தனக் குதவி—எனத்
தாங்கு உயர் பதவி
சட்டமுத லுத்தியோகம்
பட்டங்களு மிப்படியே (தங்காய்)

வேண்டா மினிப் பயமே—மாதர்
வெற்றி யோகிச் சயமே
மேதினியிற் பெண்ணுரிமைக்
காதரவு கண்டோமடி (தங்காய்)

சேமம் பலசேர்க்கும்—பெண்கள்
சிந்தை தனையூக்கும்
ஜீவானந்தன் பாவினங்கள்
நாவாரப் படித்திடுவாய் (தங்காய்)

---

## 16. பெண்கள் முன்னேற்றம்.

(பாண்டியன் ஈன்ற மீனாக்ஷி என்ற மெட்டு.)

பாடுவீர் பெண்கள் முன்னேற்றம்-சமூகப்
பழிகளின் மாற்றம்
சூடுவீர் வெற்றியின் தேற்றம்-சமாஜ
சுதந்திரத் தோற்றம்

(தொகையரு.)

பாவையர்கள் அடிமையாய் வாழ்கின்றதேசமோ
பாழடைவ துண்மை யறிவீர்
சேவைசெய்வீரரும் ஞானியரும் அந்நாட்டில்
செழிப்பதோ அருமைதெரிவீர்

பாட்டு.

பிள்ளைகள் ஈன்ற தாய்மாரே-மாதர் தம்
பெருமையாற் சீரே
கிள்ளைநன்மொழியின்மிக்கோரே-உயர்கல்வி
கேள்வி காண்பீரே

(தொகையரு.)

சோதிடம் சகுனமொடு மாந்திரீகங்குறிகள்
சூனியம் நம்பும் மோசம்
ஜாதிபேதங்களொடு தீண்டாமைதன்னிலே
சங்கையில்லா விஸ்வாஸம்

பாட்டு.

எந்தியே பழமை பாராட்டி-தாழ்ந்தீர்
இழிவுகள் கூட்டி
சார்ந்திடர் இன்னிலையோட்டி-ஜீவானந்
தம்மிக நாட்டில் (பாடுவீர்)

---

## 17. பெண்கள் எழுச்சி.

(சொந்தநாட்டில் பரர்க்கடிமை செய்தே என்ற மெட்டு.)

ஆடவர் தமைத் தெய்வமென்றெண்ணியே
அஞ்சிடோம்-இனிக்-கெஞ்சிடோம்
கேடவர்செய்யக் கும்பிட்டுவாழ்ந்திந்துக்
கெட்டிடோம்-துயர்ப்-பட்டிடோம் (ஆட)

பாவையர்கள் சுதந்திரம் பெறுதல்
பாபமோ-மனஸ்-தாபமோ
ஆவலோடெம் அடிமையைத்தீர்ப்பதில்
அச்சமோ-உளம்-துச்சமோ (ஆட)

பொழுதெல்லாம்பணிப் பெண்களாய்மானம்
போகவோ-நாங்கள்-சாகவோ
தொழுதுமேதேகம் விற்பமோவெங்கட்குத்
தொல்லையோ-சுகம்-இல்லையோ (ஆட)

நாங்களும்மக்க ளென்பதுமுற்றும்
ஞாயமே-ஏது-பாயமே
நீங்களாண்க ளாதிக்கம்வகிக்கின்ற
நேசமே-பெருந்-மோசமே (ஆட)

மங்கையரினி யென்றும்விடுதலை
வாழ்த்துவோம்-பகை-வீழ்த்துவோம்
எங்கும்போற்றும் பிறப்புரிமைவேண்டல்
ஈனமோ-அவ-மானமோ (ஆட)

திட்டமாய்வெற்றிக் கானநெறிநன்கு
தேர்ந்திட்டோம்-ஒன்று-சேர்ந்திட்டோம்
மட்டில்வைதிக ரின்மிரட்டைக்கண்டு
மலைவுறோம்-சித்தம்-கலைவுறோம் (ஆட)

தடைகளொத்தனை நேரினுமேமாதர்
தாங்குவோம்-பூவி-லோங்குவோம்
நடைபிசகுவதின்றி வெல்லும் ஜீவா
னந்தமே-ஆகும்-சொந்தமே (ஆட)

---

## 18. விதவைத்துயர்.

(பஞ்சாப்புப்படுகொலைதனை நினைந்தால் என்ற மெட்டு.)

பல்லவி.

கன்னிவிதவைத்துயர் நினைந்திடக்கண்
கலங்கிடுமே-நெஞ்சங்-குலுங்கிடுமே (கன்னி)

அநுபல்லவி.

தன்னிகரில்லாத அன்பின் அன்னைமுதல்மற்றவரால்
தஞ்சமின்றியென்றும் வாடச்
சஞ்சலத்திற்புதைபடும் (கன்னி)

சரணங்கள்.

மனித உணர்வைக்கொல்லும் மடக்குணமே
வகுக்கவிதவையானோர் நடைப்பிணமே
புனிதஉரிமையற்ற தனிஉருவங்களாகிப்
பொன்றும்வரை மங்களமும்
இன்றிப்பல துன்பமுறும் (கன்னி)

தொண்டுகிழவர் மணந்துசுகம்பெறவே
ஜோதியிளநங்கை கைம்பெண்துயருறவே
கண்டுமீரமற்றமூர்க்கர் கொண்டமதப்பிடிப்பாலே
கட்டுப்பட்டுக் காதல்வழி
விட்டுச்சுக மற்றுவாடும் (கன்னி)

சாக்கடையிற் பிள்ளைபெறும் தாழ்நிலையே
தற்கொலையுஞ்சோரங்களுந் தான்மலையே
தீக்கொடியர்மறுமண நோக்கமறுப்பதாலன்றோ
தேசத்திலிந் நாசச்செயல்
தீராதுசா பத்தால்வாழும் (கன்னி)

பூவில்வேறெத்தேசத்திலிப் புன்மைகண்டோம்
புத்தியின்றிப்பெண்கள்கைம்மை புகுதக்கொண்டோம்
பாவியினும்பாவியரே படுந்துயரால்கதறும்
பந்தம்பல வந்தம்ஜீவா
னந்தமற நைந்துவாடும் (கன்னி)

---

19. (என்ன கொடுமை இங்கிலீஷ்துரைத்தனத்தில் என்ற மெட்டு)

பல்லவி.

என்ன கொடுமை-நாம்
எண்ணினும் துயரம் கன்னிப்பெண்ணை விதவையென்பது (என்)

சரணங்கள்.

ஏனைய நாட்டினர் இகழுதற்காச்சே
இந்துமதப்பிழையி லிதுபெரிதாச்சே
இன்னுமோ இவ்விதம் நன்மையோ ஐயய்யோ
ஈவிரக்கமின்றியாண்கள் பாவையரைத்துன்புறுத்தல் (என்)

ஐந்துவயதுடைய அறியாச்சிறுமியையும்
அந்தோ விதவையென்று அழைப்பதிலர்த்தமுண்டோ
அநீதம் அநீதம் ஆகாது ஆகாது
ஆர்வமுடன் ஜீவானந்தன் பாவினம்பழிப்பதிது (என்ன)

---

## 20. பெண் கல்வி.

(பாலாபிஷேகப் பழநிமலையப்பன் என்ற மெட்டு.)

பாட்டு.

பெண்மக்கள் பேதையரென்றிடுவோர் முழுப்
பித்தரென்றேபறை சாற்றிடுவோம் (பெண்)

உண்மைக்கண் நின்றவர் இன்னுரிமைநாடி
ஒத்துழைத்துக்காதல் போற்றிடுவோம் (பெண்)

(தொகையறு)

பண்டுமுதலின்றுவரை பெண்டிர் தவழும்புகழ்ப்
பாண்டித்யமுற்றதில்லையா
பற்பலகலாவதிகள் இப்புவியிலங்கங்கே
பார்த்து மனமாற்றமில்லையா

பாட்டு.

பகர்பழிப்புரையினி யெதுமுதவாது
பணிமொழிமகளிரின் படிப்பிதுபோது
பல்கிச்செழித்து வளர்ந்திடத்தொண்டு
நல்கிடச்சேமமும் வெற்றியுமுண்டு (பெண்)

(தொகையறு)

நாகரிக அளவுகோல் மாதர்தம்நிலைமையாம்
நானிலங்கண்ட உண்மை
நல்லரசு சமுதாய நாடுகள்பேணுவது
ஞானவொளிவீசு பெண்மை

பாட்டு.

நவயுகநெறிவழி அரிவையரின்றே
நலமிகுபலகலை பயிலமுயன்றே
நாட்டில் விடுதலைப்போர்தனைத் தாங்கும்
நாளேநன்னாள் ஜீவானந்தமிக்கோங்கும் (பெண்)

---

## 21. பொது.

(எத்தனை ஜன்மங்கள் வந்துபிறந்தாலும் என்ற மெட்டு.)

பெண்டிர் ஏமாந்தநாள் சென்றது சென்றது
பேணினோம் விடுதலை சோதரரே
எண்டிசையும் பந்தம் முற்றுந் தகர்ந்தது
இன்னுரிமைபெற்றோம் சோதரரே (பெண்)

பாலியப்புன்மனத் தீமையொழிந்திடப்
பாரினிற்போர்கொண்டோம் இத்தினமே

கேலிபிறவன்றோ பொம்மைக்கலியாணக்
கேவலந்தீர்ப்பதா லாம்கனமே (பெண்)

தக்கவிதவைமணம் வைதிகரெதிர்ப்பிலும்
தாரணிபோற்றிட வேண்டுகின்றோம்
மிக்கநற்காதலின் கன்னியர்விதவையாய்
வீழ்ந்தழும் குரலொலி தூண்டவென்றோம் (பெண்)

தீயும் பாம்புமாய் ஆணொடுபெண்வாழ்தல்
கேடெனவேபறை சாற்றினோமே
சேரியல்பாகவி வாகரத்தும்வேண்டி
நெஞ்சுரங்கொண்டதைப் போற்றினோமே (பெண்)

ஒத்துழைத்தன்பொடு மெத்தநலம்பெற
உற்றசமத்துவம் கொண்டனமே
சொத்துரிமைபெற்று நிற்குமக்காலமே
தோழமையுண்டெனக் கண்டனமே (பெண்)

காதல்மணந்தனை ஆதரித்தோம்பழங்
கட்டுடைத்தோம் வெற்றி காட்டிவிட்டோம்
பாதகமாம்சாதி பேதங்கள்கொன்றுமே
பாங்கின்மணவினை கூட்டிவிட்டோம் (பெண்)

சாத்திரக்கேடுகள் கோத்திரச்சண்டைகள்
சாகின்றதைப்பாரீர் தோழர்களே
ஆத்திரமாய்சீவா னந்தமொடுபெண்கள்
ஆக்கம்பெறக்காணீர் தோழர்களே (பெண்)

---

## 22. பாப்பா பாட்டு.

பூரணசுயேச்சைபெறு பாப்பா—பிறப்
புரிமையதுவாகும் பாப்பா
வீரமுடன்விடுதலை பாப்பா—என்றும்
வேண்டிவாழவேண்டுமடி பாப்பா (பூரண)

பெண்ணைப்பழிப்பவரே பாப்பா—பெரும்
பேதையரென்றெள்ளிடுவாய் பாப்பா
மண்ணிலாடவர்போல பாப்பா—முழு
வரிசைபெறமுயல்வாய் பாப்பா (பூரண)

தன்மதிப்பிலோங்கிடுவாய் பாப்பா—உன்னைத்
தாழ்த்துவோரைத் தாழ்த்திடுவாய் பாப்பா
துன்மதியர் வைதிகரால் பாப்பா—இங்குத்
தொல்லையின்றி நன்மையில்லை பாப்பா (பூரண)

சாதியொழியவேணும் பாப்பா—உயர்
சமத்துவம் பேணவேணும் பாப்பா
நீதிதழையவேணும் பாப்பா—மக்கள்
நேசம்பெருகவேணும் பாப்பா (பூரண)

சோதரரைத்தாழ்த்துவதே பாப்பா—இந்தத்
தொல்லுலகிற்படுபாவம் பாப்பா
பாதகர்கள் சாதிவெறி யாலே—தாழ்வாய்ப்
பள்ளுப்பறையென்றுவைதார் பாப்பா (பூரண)

எல்லாரும் நிகரடி பாப்பா—புவி
எல்லார்க்கும் சமமடி பாப்பா
சொல்லாருமன்பினொடு வாஞ்சை—கொண்டு
சோதரத்துவத்திலோங்கு பாப்பா (பூரண)

சொத்துரிமையின்பமுத லெல்லாம்—பெறச்
சுதந்திரம் பெண்ணுக்குண்டு பாப்பா
அத்துமீறியாடவர் பறித்தார்—அவை
ஆண்மையுடன் மீட்பாயடி பாப்பா (பூரண)

புத்திக்குப் பொருந்தநட பாப்பா—பிற
போதனைக்கடங்கவேண்டாம் பாப்பா
எத்தையுமே யெண்ணிப்பாரு பாப்பா—உனக்
கேற்றதாயின் ஒத்துநட பாப்பா (பூரண)

அன்னியர் தமக்கடிமை பாப்பா—என்றும்
அழிவினைக்கூட்டுமடி பாப்பா
உன்னியதையொழிக்கும் காட்டம்—இந்த
உலகமுவந்ததடி பாப்பா (பூரண)

மூடவழக்கத்தையொழிப் பதுவே—நீ
முன்னேற்றத்துணைபுரியும் பாப்பா
கேடெனத்தெரிந்தபின்னும் சும்மா—அஞ்சிக்
கிடப்பதழகல்லடி பாப்பா (பூரண)

வீரமுள்ளமாதர்மணிக் கூட்டம்—இங்கு
வெற்றியுடன்தோன்றுதடி பாப்பா

தீரமுடன் நீயுமவர் கூட்டம்—சேரத்
தேர்ச்சிபெறு உன்கடமை பாப்பா (பூரண)

ஞானவல்லியானயிளம் பாப்பா—ஜீவா
னந்தமுடனேமகிழு பாப்பா
கானமிகுதேசவிடு தலையே—உன்னால்
கண்டுமகிழ்வெய்தலாகும் பாப்பா (பூரண)



இராஜேந்திரா பிரிண்டிங் ஓர்க்ஸ், கோயமுத்தூர்.

